# போர்வாள்

"போர்வாள்"

சந்தா விபரம்

| | | |
|---|---|---|
| ஓராண்டு | ரூ. | 5 0 0 |
| 6 மாதம் | ரூ. | 2 8 0 |
| தனிப்பிரதி | | 0 1 6 |

ஆசிரியர்கள் : காஞ்சி. மணிமொழியார்
மா. இளஞ்செழியன், B A (Hons)

திராவிடர் வாரத்தாள்

தனி இதழ் அணா 1½
வெளிநாடு அணா 2

வாள் 3 | சென்னை, திருவள்ளுவர் ஆண்டு 1980 தை 15
28—1—50 சனிக்கிழமை | வீச்சு 20


## அந்த இரு வழிகள்!

"நீங்கள் எந்த மதத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், அந்த மதத்தில் நம்பிக்கை உடையவர்களாக இருங்கள். இங்கு சிறிய கோயில் இருந்தாலும, அதனைப் பாதுகாத்துவாருங்கள். நீங்கள் குழப்பமடைந்திருப்பதாக உணர்ந்தால், அங்குச் செல்லுங்கள். மேலும் குழப்பம் குறையாமல் இருந்தால், அதனைப் போக்க ஆண்டவனுக்கு விண்ணப்பித்துக்கொள்ளுங்கள்" —சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

"எல்லா வசதிகளையும் விஞ்ஞானம் நமக்கு ஏற்பாடு செய்திருக்கின்றது, இனியும் செய்துவரும். அது, தற்கால வாழ்க்கை அமைப்பை உருவாக்கி இருக்கிறது. இவை அனைத்திலும் சிறந்ததோர் கோட்பாடு கொண்டது விஞ்ஞானம். வாழ்க்கையையும், சமுதாய அமைப்பின் முழு உருவத்தையும், அது செயற்படும் முறையினையும். விஞ்ஞான விதிகளின்படி கண்டு உணர்வதற்கு நமது மூளைக்குப் பயிற்சியளிப்பதே அச் சிறந்த கோட்பாடாகும். விஞ்ஞானம் என்பது உண்மையானல், நீங்கள் அந்த உண்மையை மேற்கொள்ளவேண்டும்." பண்டித ஜவகர்.

மனித வாழ்க்கையில் மேற்ள்ள வேண்டிய இரு வழிகளை, ருவர் கூறியுள்ளனர். இருவ சிறந்த அறிஞர்கள். ஒருவர் க்கு ஏற்படும் குறைகளைப் க்கிக் கொள்ளவும், தேவைகப் பெறவும் 'ஆண்டவனு'க்கு விண்ணப்பித்துக் கொள்ளச் சொல்லுகிறர். மற்ருெருவர் விஞ்ஞானத்தை மேற்கொள்ளவேண்டுகிறர். இருவர்கூற்றிலும் ஒற்றுமை இல்லை. ஒற்றுமை இல்லாததோடு முரண்பாடு உடையதாகவும் இருக்கிறது. இருவரும் வெவ்வேறு எதிர்எதிர் திக்குகளை நோக்கிச் செல்லுமாறு மக்களுக்கு ஆணை இடுகிறர்கள்.

முன்னையவர் கூறிய மதவழி—ஆண்டவனுக்கு வேண்டுகோள் விடும் வீண்வழி — மனிதனின் மடமைப் படுகுழியாகும் மனிதன், தன்னிடம் இயற்கையாக உள்ளதும், முயன்ருல் பெறக்கூடியதுமான, உயர்ந்த — தேவையான அறிவியல்பாதையை அர்த்தமற்றது—என்று அலட்சியப்படுத்தத் தூண்டக்கூடியது அந்தவழி. அந்த வழியைப் பின்பற்றினவர்களால், இதுவரை உலகம் எந்த ஒரு துறையிலாவது வளர்ச்சி பெற்றுள்ளது என்று, இதுவரை, எவரும் மெய்ப்பித்துக் காட்டியது கிடையாது. அந்தத் தேய்ந்த பாதைவழியே, சென்றதினுல், மனித சமுதாயம் பெற்றுள்ளது வளர்ச்சியல்ல, வளமல்ல—வீழ்ச்சி, வறுமை! மனிதனிடத்தில் மறைந்து கிடக்கும் சக்தியை, மனித சமுதாயத்துக்குப் பயன் தரும் முறையில், பயன்படுத்தப்படவேண்டிய, சாதாரண அறிவைக்கூட, அந்த மதவழி மனிதனுக்குக் கொடுக்கத் தவறிவிட்டது. மனிதனுக்கு, தனது எல்லை அற்ற ஆற்றலை உணருவதற்கான வாய்ப்பினை அளிக்காமல், அவனை மிருக நிலையிலேயே இருந்தவர மதவழி போதித்துவந்திருக்கிறது—மனித முயற்சியைக் கிண்டல் செய்தும் கண்டித்தும் வந்திருக்கிறது,

Best copy available.

மனிதனால் எதுவும் முடியாது' என்னும் பெருஞ் சுமையை மனிதனுடைய மூளையிலே திணித்து, மனிதனை மிருகசுபாவத்தோடு வாழ ஏற்பாடு செய்ததும் இந்த மதவழிதான். 'மனிதன் பிறக்கும்பொழுதே அடிமையாகப் பிறக்கிறான். அவன் விடுதலை பெற முயல்வது வீண் முயற்சி—வெற்றி தராது' என்ற அடிமைப் போதனையைச் சிறந்த கோட்பாடாக்கி, மனித வளர்ச்சியைச் சீர்குலையச் செய்ததும்—செய்து வருவதும் இந்த மதக் கோட்பாடுதான். மதப்பண்பாடு மனித மூளையில் நிரம்பி இருந்தவரையில், கிடைத்தல் புசிப்பதும், இல்லையேல் பட்டினி இருந்து சாவதும்தான் வாழ்க்கை முறையாக இருந்துவந்தது. குகையில் தங்குவதும், புதரில் பதுங்குவதும், பிறந்தமேனியோடு காலங்கழிப்பதும், மதக்கோட்பாடு, மனிதனுக்குத் தந்துதவிய பெரு நிலையாகும். பஞ்சத்தால் மடிந்தோரை, தட்ப வெட்ப நிலையால் நிர்மூலமானோரை, பிணியால் நசிந்தோரை, இந்த மத ஞானத்தால் தடுத்து நிறுத்த முடியவில்லை—என்றும் முடியப்போவதுமில்லை.

மனிதனை, மிருகத்தோடு ஒப்பவைத்து நோக்கிற்று இந்த மதவழி. மனிதனிடம் மறைந்து கிடந்த சக்தியை— திறமையை—அறிவை—அழித்துவிட முயற்சி எடுத்துக்கொண்டது இந்த மதவழி. மனிதனைக் கோழையாக்கிற்று — அடிமையாக்கிற்று — நடமாடும் பிணமாக்கிற்று இந்த மடமை மார்க்கம். இந்த மதவழியால் — மனிதகுலம் பெற்று வந்துள்ளது கேடு—கொடுமை—வறுமை — எல்லாத் துறைகளிலும் இல்லாமை.

மதவழி என்னும் மடைமைக்கும் மனிதப் பார்வை என்ற விஞ்ஞானத்திற்கும் போர் — கடும்போர் மூண்டு ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆகின்றன. இவ்வாறு எழுந்த ஒவ்வொரு சிறுசிறு சண்டைகளிலும் விஞ்ஞானமே வெற்றி பெற்று வந்திருக்கிறது. விஞ்ஞான அறிவு ஒளி முன்பு துஞ்சும் பனிநீராயிற்று மதஞானம்!

விஞ்ஞான அறிவின் விளைவாகத்தான் காடு, அழகிய நகரமாக மாற்றப்பட்டது. குகைகள், கோட்டை கொத்தளங்களாக மாற்றி அமைக்கப் பட்டன. பாலைவனம் பழமுதிர் சோலைகளாக அமைக்கப்பட்டன. கொந்தளிக்கும் கடலின் கொட்டத்தை, மரக்கலத்தின் துணை கொண்டு, மனிதன் அடக்கினான். பறவைபோல், விண்ணிலே வேகமாகப் பறக்கும் பெரும் பறவையாக மாறினான் மனிதன். நீரைநீராவியாக்கும் முறையைக் கண்டான். காட்டாற்றைக் கட்டுப் படுத்தி, மின்சாரத்தை உண்டாக்கி, பெரும் பெரும் இயந்திரங்களை இயங்க வைத்தான்—உலக இருள் போக்கினான். இப்பெரும் உலகை ஒரு சாதாரண சிற்றூர் என்னும் நிலைக்குக் கொண்டு வந்துவிட்டான். காலத்தைக் குறுக்கிவிட்டான். இவ்வளவும் விஞ்ஞானத்தின் அருந்துணையால் மனிதன் பெற்ற பெறுதற்கரிய பெரும் பேறு.

மதப் பார்வை மனிதனை மிருகத்திற்குச் சமமாக வைத்திருந்தது. விஞ்ஞான வெளிச்சம், மனிதனுக்கு மனித நிலையைக் கொடுத்து முன்னேற்றப் பாதையில் செலுத்துகிறது. விஞ்ஞானப் பார்வையை விட்டுப்பிரிந்து நிற்கிறபொழுது, மனிதன் கொடிய காட்டுவிலங்காகிறான். தன்னலம் தலையெடுக்கிறது. தடுமாற்றம் ஏற்படுகிறது. 'ஆண்டவன்' பெயர் கூறி அதிக்கிரமச் செயலில் ஈடுபடுகிறான். மறுபடியும் விஞ்ஞான ஒளியைக் கண்டதும் மனிதநிலை எய்துகிறான். பிறர் நலம் பேணும் பெரியவனாகிறான். நம்பிக்கையோடு முயற்சிக்கிறான். நலம் பல நாட்டு மக்களுக்குச் சேர்த்துத் தருகிறான். தன்னால் ஆகும் என்ற உறுதியோடு, தளராது முயன்று, தானும் இன்பத்தில் மூழ்குவதோடு, மற்றவர்க்கும் அந்த இன்பத்தைப் பொதுவாக்குகிறான்.

புதுப் புது மதங்கள் எழுந்தபோது, அந்தந்த மதங்களின் சிருஷ்டி கருத்தாக்கள் விஞ்ஞான வெளிச்சத்தைத் துணைகொண்டுதான், மற்ற மற்ற மதக்கோட்பாடுகளை, விசாரணை செய்தார்கள். விசாரித்து உண்மை காணும் விஞ்ஞான முறையைத்தான் சிறந்த மெய்ஞானமாகக் கொண்டிருந்தனர். மற்றொரு கோட்பாட்டைத் தகர்த்து எறிந்துவிடுவதோடு, விசாரணை செய்யும் உயர்ஞானத்தை உதறித் தள்ளிவிட்ட தவறினாலும், இயற்கையில் நிகழும் பல சம்பவங்களுக்குக்காரண காரியங்களைக் கண்டுபிடிக்கும் சாதனங்களின் குறைவினாலும், மீண்டும் மீண்டும் மடைமையின் சிகரமான 'ஆண்டவனை' சிருஷ்டிக்கும் பொருளற்ற முடிவிற்கு வந்து நின்றனர் மதக் கர்த்தாக்கள். ஆரம்பத்தில் மனிதப் பண்பாட்டிற்கு, அதாவது அறிவுக்கு மதிப்பளித்து ஆராய்ச்சி செய்யத் தலைப்பட்டவர்கள், விளக்கிக் கொள்ள முடியாத மயக்கம் ஏற்பட்ட அந்தியத்தில் அர்த்தமற்ற நம்பிக்கைக்குப் பலியானார்கள். அவர்கள்மீது குறைகூறுவதில் பலன் இல்லை. காலத்தின் கோளாறு, அவர்களுடைய சிறந்த அறிவுத் திறத்தை, அதற்குமேல் செல்லவிடாமல் தடுத்தி நிறுத்தி விட்டது. எனவே, ஆண்டவனை அஸ்திவாரமாக வைத்துக் கொண்டு மதக் கோட்டைகளை எழுப்பினர். மக்கள் அனுஷ்டிப்பதற்கென சில விதி முறைகளை வகுத்து, மக்களை மிருக சுபாவமற்றவர்களாக மாற்ற முயற்சிப்பதோடு நின்றுவிட்டனர். அவர்கள் வாயுரைகள், உபதேச மொழிகளாக உலாவுகின்றன நூல் வடிவங்களாக. அவ்வளவு தான் அவர்களால் செய்ய முடிந்தன!

மதங்களின் சிருஷ்கருத்தாக்கள் மட்டுமே உத்தமர்கள்—மனித உபகாரிகள் என்று தீர்மானித்து விடக்கூடாது. விஞ்ஞான உண்மையைக் கூறிய உத்தமர்கள் எவ்வளவோ பேர், மதகுருக்கள்மார்களால், சித்திரவதை செய்யப்பட்டிருக்கின்றனர்—நஞ்சூட்டிக் கொல்லப்பட்டிருக்கின்றனர்—உயிருடன் தீயிலிட்டுப் பொசுக்கப்பட்டிருக்கின்றனர்—சாகும் வரையில் சிறையிலே தள்ளப்பட்டிருக்கின்றனர். இப்படி உலக உத்தமர்களை எல்லாம் சித்திரவதை செய்து மகிழ்ந்தவர்கள் 'ஆண்டவனின்' திருப்பணியாளர்களேயல்லாது, நாகரிகப் பெருத்த காட்டுமிராண்டிகள் அல்லர். உண்மையைக் கண்டு அவர்கள் அஞ்சினர். உண்மையைத் தேடுவோரை, தங்களுடைய ஜன்ம சத்துருக்களெனக் கொண்டனர். இதனை மறைக்க, விஞ்ஞான விற்பன்னர்களை, புதிய புதிய சாதனங்களை உருவாக்கி உலகுக்கு வழங்கிய உத்தமர்களை, மனித சமுதாய எதிரிகள் என்று பழித்துக் கூறி பொதுமக்களை, அவர்கள் மீது ஏவி மகிழ்ந்தனர், இந்த மதக் குருக்கள்மார்கள். மதப் பார்வை அவர்களுடைய அறிவொளியைப் பாழ்படுத்திவிட்டதால், விஞ்ஞானப் பெரியார்களுக்குக் கேடு சூழ, அவர்கள் துணிவு கொண்டனர். விஞ்ஞானப் பெரியார்கள் இன்று போற்றப்படுகிறார்கள். அவர்கள் செய்து தந்த சாதனங்கள் தரும் வசதியால், இந்த மதகுருக்கள்களின் பரம்பரையினரும சுகபனுபவித்து வருகிறார்கள். இதற்காக, இவர்கள் வெட்கப் படவுமில்லை—வருத்தப் படவுமில்லை—முன்னாள் போக்கை மாற்றிக் கொள்ளவுமில்லை. மாற்றிக் கொள்ளாமல் இருந்தால் கூட பரவாயில்லை என்று கூறிவிடலாம். மாற்றிக் கொள்ளாததோடு விஞ்ஞானத்தைப் பழிக்கவும் முற்படுகிறார்கள்.

அந்த அரும்பணியாளர்களின் பிரகாசிடர் செய்யும் அர்த்தமற்ற உபதேசம்போலத்தான் இருக்கிறது நமது சக்ரவர்த்தி ஆச்சாரியாரின் மதபோதனை! டெல்லிக்கு எண்பது மைல் தொலைவிலுள்ள அகதிகளைப் பார்த்து, 'ஆண்டவனுக்கு விண்ணப்பம் செய்யுங்கள்' என்றமடைமையைப் போதிக்கிறார் ஆச்சாரியார். அகதிகளின் வேதனை தீருமோ இந்த அர்த்தமற்ற போதனையால்? மனிதனுக்கு வந்த கேடுகள் அனைத்தையும் இதுவரையில் ஆண்டவன் போக்கினதாகத் தெரியவில்லையே! அகதிகளுக்கு வந்த—வரும் கேடுகளுக்கெல்லாம், பரிகாரம் தேடிக் கொள்வது ஆண்டவனுக்கு விண்ணப்பித்துக்கொள்வது மூலந்தான் நிறைவேறக்கூடும் என்பது உண்மையானதாக இருக்குமானால், இதற்கு ஒரு அரசு ஏன்? அதிலே ஆச்சார்யார் அமர்ந்திருந்ததேன்?

உலகத்தை இயக்க விஞ்ஞானத்தின் துணையை நாடிக்கொண்டிருக்கும், இந்த வேளையில், ஆச்சாரியர் ஆண்டவனுக்குத் தூது அனுப்பச் சொல்வது துடுக்குத்தனமாகும். ஆச்சாரியாரின் கட்சியான காங்கிரசின் அர்த்தமற்ற அரசியல் நடவடிக்கைகளின் சிருஷ்டிதான் இந்த அகதிகள். அவர்கள், இன்று அனுபவித்துவரும் சகலவிதமான வேதனைகளுக்கும் முழுப் பொறுப் பேற்கவேண்டியவர்களும் இவர்கள்தான். அவர்களுக்கு, நல்ல எதிர்காலத்தைத் தேடித்தரவேண்டியவர்களும் இவர்கள்தான். அதற்கான, அதிகாரம் பெற்றுள்ளவர்களும் இவர்கள்தான். இந்தப் பொறுப்பை உணர்ந்தவர்தான் ஆச்சாரியார். இருந்தாலும், தங்கள் கட்சியினரின் இயலாமையை எண்ணி, குறைநீங்க, ஆண்டவனுக்கு விண்ணபபம் செய்யச் சொல்லுகிறார், அன்பர் ஆச்சாரியார். இந்த முறையில் அகதிகளின் குறை நீங்காது — வேதனை விலகாது! ஆனால், ஆச்சாரியாரின் தோழர்களுக்கு, அகதிகளால் ஏற்படுத்தப்படும் தொல்லையின் வேகம் கொஞ்சம் குறையும்—அதுவும் சில நாளைக்கு மட்டும். இதுவரையில், ஆதிக்கக்காரர்கள், தங்கள் சுயநலத்திற்காக மதத்தைப் பயன்படுத்திவந்தது போலவே, இப்பொழுது ஆச்சாரியார பயன்படுத்துகிறார், நிற்க.

இச் சம்பவம் நிகழ்ந்த இரண்டு நாளைக்குப் பிறகு, ஆச்சாரியாரையும் உட்காரவைத்துக்கொண்டு, பண்டித ஜவகர் பேசுகிறார் விஞ்ஞானத்தின் அருமை பெருமைகளை. நம்முடைய ஒவ்வொரு செயல்களையும் விஞ்ஞான ஒளியின் துணையினால் ஆராய்ந்து பார்க்கும் அறிவு உணர்ச்சி தேவை என்கிறார் பண்டிதர். விஞ்ஞானம் தந்த சாதனங்கள், நமக்கு சுகந் தருவதாக இருப்பதால் அவைகளை மட்டும் ஏற்றுக்கொண்டு, விஞ்ஞானக் கண் பெறுமல் இருப்பது விரும்பக்கூடியதாகாது. உள்ளே நஞ்சிருக்கும், வெளியே இனிப்பும் கவர்ச்சியும் கலந்திருக்கும் தன்மையை ஒத்ததாக மனித சமுதாயம் இருப்பதுகூடாது. இந்த விரும்பக்கூடாத போக்கினால்தான், வாழ்வளிக்கும் இயல்புடைய விஞ்ஞானம், வறுமைதரும் பண்பாகக் கறைபடுத்தப் பட்டுப் போயிருக்கிறது. சுகம்தரும் விரிந்த நோக்குடைய விஞ்ஞானம், துன்பந்தரும் சுயநல நோக்குடையதென்ற மாசு மூடிப்போயிருக்கிறது. அமைதியின் தூதாக வந்த விஞ்ஞானம் அமர்க்களத்தின் அஸ்திவாரம் என்ற அவதூறுக்கு ஆட்பட்டுப் போயிருக்கிறது.

விஞ்ஞானத்திற்குவிடுதலை வேண்டும். மதப்பார்வையாளர் ஏவல்வழி நிற்கும் விஞ்ஞானத்தை விடுத்து, இவ்வுலகில், அதன் ஒளிவீச ஏற்பாடு செய்தாக வேண்டும். அதற்கு மனிதன் தன் நம்பிக்கைகொள்ள வேண்டும். ஆண்டவனுக்குகொஞ்ச நாளைக்கு ஓய்வளிக்க வேண்டும்.

ஆச்சாரியார் வழி ஆபத்தானது! கோபுரத்திலிருந்து நம்மைக்குப்பை மேட்டிற்கு இட்டுச்செல்வது, அவர் கூறும் மதப்பாதை! அந்த வழியால் நாடு நலிவைத்தான் அடைந்து வந்திருக்கிறது.

மற்றோர் வழி விஞ்ஞான வழி! அதுவே வளர்ச்சி தரும் மார்க்கம். அந்த நல்வழியையே நாம் பின்பற்றுவோம், 'மனிதனே சர்வமும்' என்று முழங்குவோம் பண்டிதர் இந்த உண்மையை மறந்து, மதவழியே சில சந்தர்ப்பங்களில் செல்லுவார் அறிந்தோ அறியாமலோ! அதனையும் இடித்துக் காட்டி, விஞ்ஞானபாதைவழிசெல்லுவோம். அதுவே மனித குலத்தை மாண்புடையதாக்கும்.

---

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

யாவது இந்த நாட்டை விட்டுத் தொலைய வேண்டும்—தொலைக்க வேண்டும்—அத்துறையில் நாட்டைத் திருத்தி அமைக்க வேண்டும்—அதற்கான பணியில் ஈடுபட்டு வெற்றி காண வேண்டும்—என்றெல்லாம் அம்மாணவர்கள் எண்ணுமலா இருந்திருப்பர்?

இத்தகைய மாசினைத் துடைத்து நமது மனித சமுதாயத்தைச் சீர் செய்வதற்கு மாணவர்களால்தான் முடியும். அதற்கான நல்லநல்ல திட்டங்களைக் கற்றிருப்பவர்களும் அவர்கள்தான். ஆட்சிப்பீடத்திலே அமர்ந்துதான், இது போன்ற மாசு துடைக்கும் பணியாற்ற வேண்டுமென்பதில்லை. ஆட்சிப்பீடத்திலே எவர் அமர்ந்திருந்தபோதிலும், அவர்களை வற்புறுத்தி நாட்டின் கேடுகளைக் களைய ஏற்பாடு செய்யலாம். ஆட்சிப் பீடமேறியுள்ளோர் கேளாக்காதர்களாக இருந்துவிட்டால், கேடு சூழ்பவர்களாக மாறிவிட்டால், வேண்டுமானால், ஆட்சிப்பீடத்தை விட்டு அவர்களை அகற்ற முயற்சிக்கலாம். —அதுவும் நேரிய முறையில். ஏழையின் வியாபாரம் எப்படி?



One side of the page is darker

# இருபது ஆண்டுகளுக்குப் பின்னர்?

ஒன்றல்ல இரண்டல்ல இருபது ஆண்டுகள் தேவையாக இருந்தன, நாட்டுக்கு நல்லது செய்த இரண்டு தலைசிறந்த அரசியல் மேதைகளைப் புகழ்ந்து இரண்டு வார்த்தைகள் கூறவும், அவர்கள் புரிந்த தொண்டினைப் பாராட்டிப் பேசவும், அன்பர் ஆச்சாரியாருக்கு. அந்த இருவர்களிலே முதன்மையாக இருந்த பானகல் அரசர் உயிரோடு இருந்த காலத்தில்' அவரைப் பற்றி, அரசியல் கருத்து வேற்றுமை கொண்டிருந்தோர், தூற்றிப் பழித்தது கொஞ்ச நஞ்சம் அல்ல. அவரை, ஓர் ஏகாதிபத்திய எடுபிடி என்று ஏளனம் செய்து, அவருடைய பேராற்றலைக் கேலிசெய்தனர்—பொது மக்கள் அதனை உணர்ந்து கொள்ள முடியாமல் மறைக்க முயன்றனர். ஆனால், அவருடைய சேவையை அன்று விகாரப் படுத்தியவர்கள், இன்று அவருடைய கல்லறையின் முன்நின்றுகொண்டு, அவர் புரிந்த பணியின் மேம்பாட்டை சிறப்பித்துப் பேசுகிறார்கள்.

அரசியலிலே அன்னியர் ஆதிக்கம் செலுத்தி இருந்தார்கள். தமிழர்கள், தங்களுக்காகத் தங்களுடைய மூதாதையர்கள் விட்டுப் போன அரும்பெரும் செல்வங்களை அலட்சியப்படுத்தினர். செல்வம் சீரழிகிறதே என்றும், அதனைப் புதுப்பித்து காலத்துக்கேற்ப மக்களுக்குப் பயன்படுத்துவோம் என்றும், சிறந்த முற்கால முறைகளுக்காகப் பரிவுகாட்டிப் போராடும் பண்பையும் இழந்து கிடந்தார்கள் தமிழர்கள். தமிழர்கள் கண்ட உண்மைகளை ஒன்றிரண்டையாவது, மறைந்து போக விட்டுவிடாமல் பாதுகாத்துப் பேணவர் முயன்ற போதிலும், ஆங்கிலேய ஆதிக்கக் காரர்களிடமிருந்து எதிர்ப்பு பலமாகக் கிளம்பியது. தமிழர்களுடைய நாகரிகம் கலை, வாழ்க்கை முறை முதலிய அனைத்தையும் எப்பாடுபட்டேனும் அழித்துவிடக் கங்கணம் கட்டிக் கொண்டிருந்த உத்தமர்களின் உக்கிரத் தாண்டவம் வேறு உச்சத்திலிருந்தது. வீரத்தமிழர்களிடமோ அலட்சியம், சலிப்பு, சஞ்சலம், அறியாமை குடிகொண்டு இருந்தது. இந்தச் சூழ்நிலையில் பானகல் அரசர் இம்மாகாண ஆட்சியை நடத்தும் பொறுப்பேற்றிருந்தார். அந்தக் காலத்தில் அவர் செய்த பல நல்ல காரியங்களிலே மிகமுக்கியமானது நாட்டு மருத்துவத்திற்கு உயிர்கொடுத்தது. அவருடைய அரிய முயற்சியின் விளைவுதான் சென்னையிலுள்ள 'இந்திய மருத்துவக் கல்லூரி' அதனுடைய வெள்ளி விழா கடந்த இருபதாந்தேதியிலிருந்து மூன்று நாட்கள் கொண்டாடப் பட்டிருக்கின்றன. அந்த மருத்துவக் கல்லூரியினால், நாட்டு மருத்துவம் தேவையான அளவு சிறப்பெய்வில்லை என்பதைவேதனையோடுதான் குறிப்பிட வேண்டி இருக்கிறது. வெறும் அரிஷ்டம்—மதுவர்க்கம், சூர்ணம் —பட்டைத் தூள், கிருதம் — குடிநெய், முதலியவைகளோடு நின்றுவிடக் கூடிய ஆரிய மருத்துவ முறையான ஆயுர்வேதத்திற்கே அதிகமான சலுகை அளிக்கப்பட்டிருக்கிறது. தமிழர்களுடைய தனிச்சிறப்போடுகூடிய சித்த மருத்துவ முறை பெரியதோர் அளவில் புறக்கணிக்கப்பட்டே வரப்படுகிறது. பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே கொடும் நஞ்சுகளை எல்லாம் மருந்தாக மாற்றி, மக்களுக்கு ஏற்பட்ட பிணிகளைப் போக்கிய பெருமை சித்தர் முறைக்கு உண்டு, இரும்பு — செம்பு — பொன் — வெள்ளி முதலிய உலோகங்களை செந்தூரமாகவும், பற்பமாகவும், சுண்ணமாகவும் மருந்தாக்கி மக்களுக்குண்டாகும் பலக்குறைவைப் போக்கி சிறப்புப் பெற்றுள்ளது சித்த மருத்துவம். இத்துறையில் ஆங்கில மருத்துவம் இன்றும் துவக்க நிலையில்தான் இருக்கிறது. ஆயுள்வேதம், ஒன்று இரண்டு சித்தமுறைகளைக் களவாடிக் கொண்டு, தனது என்று சொந்தம் பாராட்டிப் பீத்திக்கொள்ளுகிறது. என்றுதான் இந்தத் தீவினையை அகற்ற 'அரசியலார் முற்படுவார்களோ— சித்த மருத்துவத்திற்கு ஏற்றமளிக்க ஆளவந்தார்கள் என்றுதான் முனைவார்களோ.—திராவிடர்கள் என்றுதான் விழிப்புணர்ச்சி பெற்று, தங்கள் தவறை உணர்ந்து, சித்த மருத்துவத்திற்கு சிறப்புத் தேட ஆளவந்தார்களைத் தூண்ட முற்படுவார்களோ? நிற்க.

ஆங்கிலேயே ஆட்சியின்கீழ் நாம் அரசியல் அடிமைகளாக இருந்தும் கூட, மிகமிக குறைந்த அளவு அதிகாரத்தைப் பெற்றிருந்தும் கூட, பானகல் அரசர் இந்திய மருத்துவ முறைகளை உயிர்ப்பித்தார். நமது தொழில் வளரவேண்டும் நமது மக்கள் சுகவாழ்வு வாழவேண்டும், நமது புகழ் பரவவேண்டும், என்பன போன்ற உயர்ந்த கோட்பாடுகள் கொண்டவராக பானகல் அரசர் இருந்துவந்திருக்கிறார். இது விஷயத்தில் எந்த காங்கிரஸ் தலைவர்களுக்கும், பானகல் அரசர் பின்னணியில் இருந்தவர் அல்ல. ஆனால், அவர் தூற்றப் பட்டார், அவர் உயிரோடு இருந்த காலத்தில்! ஆனால் இப்போது 20 ஆண்டுகளுக்குப் பின்னர் கீழ்கண்டபடி பேசியிருக்கிறார் ஆச்சாரியார்.

“இந்திய மருத்துவக் கல்லூரியை நிறுவினவர்கள் சுறுசுறுப்புள்ள பானகல் அரசரும் மகமத் உஸ்மான் அவர்களுமாவர். உண்மையைக் கூறவேண்டுமானால், இந்த இருசிறந்த ஆளும் திறம்படைத்தோர் முற்கால அறிவுகளை உயிர்ப்பிக்க தகுந்த முறையை மேற்கொண்டார்கள் என்பதேயாகும்.”





(10-ம் பக்கத் தொடர்ச்சி)

தூயமணியின் தாகம், இன்னது இப்படிப் பட்டது என்பதை விளக்குவாள்!”

“எப்பொழுது வருவாள், உன் அத்தை!”

“வரும் நேரம் தான்! அம்மா, ஒன்றை மட்டும் நன்றாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். தூயமணியின் மகிழ்ச்சியும் மரணமும் தங்கள் கையில் இருக்கிறது! தங்கள் மனம், அத்தை சொல்வதை ஏற்றுக் கொண்டால் தூயமணியின் கழுத்தில் மாலை! ஏற்காவிட்டால், ஏற்கத்தயங்கினால், வாள்! இது நிச்சயம்!”

“தேன் சுவை, உனக்கேனடி ஐயம்! அவர்தான் என் உயிர் இன்பம் சகலமும்! அவர் ஆசை என் ஆசை; அவர் தாகம் என் தாகம், அவர் வாழ்வு என் வாழ்வு—இத்தனை நாள் பழகியும் இதனை நீ புரிந்து கொள்ளவில்லையே! இதோ உன் அத்தையும் வந்துவிட்டாள்!”

இருவரும் எழுந்து, தேன்சுவையின் அத்தையான இசையொலியை வரவேற்றனர்.

இளவரசி வஞ்சியும், இசையொலியும், தேன்சுவையும் ஒரு தனியறையினுள் சென்று அமர்ந்தார்கள.

இசையொலி ஆரியரால் ஏற்பட்ட இன்னல்களை எல்லாம் விளக்கினாள். பாண்டியநாட்டின் வீழ்ச்சி, சோழனின் வஞ்சகச் செயல், வேதபாரகனால் இசைப் புலவன் மருதவாணனுக்கு ஏற்பட்ட என்றும் ஆறுதபுண், அதனைவிடதாளாத அவமானம், மருதவாணன்—தூயமணி சந்திப்பு, தூயமணியின் மனமாற்றமும் சபதமும், இவ்வளவையும் இசையொலி கூறினாள்! இளவரசியின் உள்ளத்தில் ஆச்சரியம் நிறைந்தது! தாமரைக் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வடிந்தது!

“அம்மா, தாங்கள் ஒரு பெரிய தியாகி!” என்று கூறி இரு கை கூப்பி இசையொலிக்கு வணக்கம் செய்தாள்!

தேன் சுவையைத் தழுவிக் கொண்டு, “பாண்டிய பரம்பரையில் உதித்த கற்பூரப் பெட்டகமா? மாண்ட இளவரசரின் மகளா நீ? தேன் சுவை, எவ்வளவு சிறும் செல்வமுமாய் வாழ வேண்டியவள் நீ! எவ்வளவு கஷ்டங்களை இந்த இளவயதில் நீ அனுபவித்துவிட்டாய்!........” என்று இளவரசி வஞ்சி கூறினாள்.

“அம்மா.........”

“கண்ணே தேன்சுவை! இனி என்னை அம்மா என்று அழைக்காதே! பணிப்பெண் அல்ல நீ! பாண்டியனின் மகள்! நீயும் நானும் ஒத்தவர்! பெயரிட்டு அழை! “அடி” என்று செல்வமாக அழை—எனக்கு அதிக மகிழ்ச்சி உண்டாகும்!”

“வஞ்சி!”

“அப்படி அழை என் கண்ணே!

“எங்களைப் பற்றி நீ பரிதாபப்படுவது இருக்கட்டும், ஆரியத்தால் சேர நாடு அழிந்து வருகிறது என்பதை நீ புரிந்து கொண்டாயா!”

“ஆம், புரிந்து கொண்டேன்!”

“நம்புகிறாயா?”

“நம்புகிறேன், ஆரியம் தாய் நாட்டை அழிக்க வந்த விஷவாடை என்று!”

“மருதவாணனின் நோக்கம், தூயமணியின் திட்டம்?”

“சிறந்தது!”

“உன் உதவி?”

“தரத் தயார்! ஆனால்.........”

“மயங்காதே! உள்ளத்தில் பட்டதைத் தயக்கமின்றிக் கூறு!”

இளவரசிமௌனமாகஇருந்தாள்! தேன் சுவையும் இசையொலியும் அவள் முகத்தை இமைகொட்டாது பார்த்திருந்தனர்!

“குழந்தாய் வஞ்சி! மனதிலுள்ளதைத் தைரியமாகக் கூறு! சேரநாட்டின் வாழ்வு, உன் கோவை இதழின் அசைவில் இருக்கிறது! தூயமணியின் உயிர் உன் உள்ள உறுதியில் மண்டியிட்டுக் கிடக்கிறது! என்ன சொல்கிறாய் கண்ணே?” என்று உருக்கமான குரலில் இசையொலி கேட்டாள்!

“ஆபத்தான திட்டமாக இருக்கிறதே!” என்று சோகமான குரலில் வஞ்சி பதிலளித்தாள்.

“உண்மை, ஆபத்தான திட்டம் தான்! ஆரியத்தைத் தொலைக்க இதனைவிட வேறு வழியில்லை! உயிரைப் பணயமாக வைத்து விளையாடும் பயங்கர விளையாட்டு இது! வீரரின் பரம்பரையில் உதித்தவள் நீ! செங்குருதியில் நீந்தி விளையாடிய சேரவம்சத்தில் தோன்றியவள் நீ! கனக விஜயர்களைத் தோற்கடித்து, கண்ணகி சிலைக்குத் தலைமேல் கல் சுமந்துவரச் செய்த சேரன் செங்குட்டுவனின் வழிவந்தவள் நீ! நீ வீரமகளிர் குலத்தின் முனைத்த வேல்! பகைப்பூண்டை, சல்லி வேரோடு வெட்டி வீழ்த்தப் பிறந்தவள்! தயங்காதே! வளமிக்க நாட்டிற்கு வாழ்வளிக்க மயங்காதே! இதோ பார். நீர்வடியும் கண்களோடு நிற்கும் தேன் சுவையைப்பார். குள்ள நரிச் செயலால் உள்ளம் நொந்து உயிர்விட்ட குன்றெடுக்கும் தோளானின் மகள்! குற்றேவல் செய்யும் நிலையில் இன்று இருக்கிறாள்! ஏன்? தன் தந்தையை வஞ்சகமாகக் கொன்று ஆட்சிப்பலிபீடத்தில் பாண்டிய நாட்டைச் சாய்த்த சோழனைப் பழிக்குப் பழிவாங்க, பணிப்பெண்ணாக நடிக்கிறாள்! நீயே சிந்தித்துப்பார் நிலைமையை! நன்றாகச் சிந்தித்துப்பார்,வஞ்சி!” என்று ஆவேசம் வந்தவளைப் போல இசையொலி பேசினாள்!.

அவள் கண்களில் வடிந்த கண்ணீரைத் துடைத்து விட்டு “அம்மா, சரி” என்றாள் இளவரசி வஞ்சி!

இசையொலியும், தேன் சுவையும் மகிழ்ச்சியோடு அவ்விடத்தை விட்டு அகன்றனர். அறையைவிட்டு வெளியே வந்தாள், இளவரசி.

நீலவானில் மிதந்து சென்ற நிலவை நோக்கினாள்!

“நானும் அவரும் வெண்ணிலவும் வானுமாவோம்! குழலும் அதன் இசையுமாவோம்! கன்னல் தமிழும் அதன் கற்கண்டு சுவையுமாவோம்!” இப்படிச் செந்தமிழ் அவள் செவ்விதழ்களில் சிரித்து நின்றது! இன்பத்தால் உள்ளம் துள்ளி விளையாடியது.

அள்ளக் குறையா அழகும், சுவைக்கத் தேயா இளமையும் கொண்ட அவள் அறிவாளா, எண்ணியதெல்லாம் இன்னலின்றி நடப்பதில்லை என்ற உண்மையை?

(தொடரும்)

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

மறைந்து வாழும் சியாங்—சேக்—ஷேக்கின் கதியையும், அந்த சியாங் சிங்கம் தீட்டிய அரசியல் திட்டம் மாயமாக மறைந்து போன கதையையும் கொஞ்சம் கவனப்படுத்திக் கொள்ளட்டும். பிறகு, ஐயம், இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும்.

போர்வாள்

திருவள்ளுவர் ஆண்டு 1980 தை 15
28—1—50 சனிக்கிழமை

# ஜனவரி 26!

ஆட்சியாளர்தம் அலுவலகங்களிலெல்லாம் அலங்காரமான விளக்குவரிசைகள்!

அந்த விளக்குவரிசைகள் ஒவ்வொன்றிலும் விசித்திரமான வர்ணஜால வேலைப்பாடுகள்!

அந்த வேலைப்பாடுகளினிடையே ஒளிவீசிக் கிடக்கும் அழகின் சிரிப்பைக் கண்டு மயங்கிய மதி மந்திரிகளின் மாபெரும் சொற்பொழிவுகள்!

அந்த அழகிய சொற்பொழிவுகளைக் கேட்டு அடா அடா என்ன அற்புதம் என்று ஆர்ப்பரிக்கும் தேசியத் திருவாளர்களின் ஆனந்த உரையாடல்கள்!

அந்த உரையாடல்களின் சுவையையும் எழிலையும் அதிகப்படுத்துவதற்காகவென்றே அவர்களை நாடி, அன்புடன் ஓடிவரும் காங்கிரஸ் ஏடுகளின் குடியரசு மலர்கள்!

அந்த மலர்கள் அத்தனையிலும், பக்கத்திற்குப் பக்கம், கண்ணைப்பறிக்கும் படங்கள்! அழகு தவழும் ஓவியங்கள்! ஆட்சியாளர்தம் அரும்பெரும் சாதனைகளைப்பற்றிய (?) அற்புதமான கட்டுரைகள்!

அந்தக் கட்டுரைகள் பலவற்றில், பொதுவுடமைத் தோழர்களுக்கும் திராவிடத் தீரர்கட்கும் சமதர்ம நண்பர்கட்கும் மாற்றுக்கட்சியினர் யாவருக்கும் தரப்பட்டுள்ள தூற்றல் திருத்தாண்டகம்!

அந்தத் தூற்றல் திருவெண்பாவை எச்சரிக்கை அந்தாதி [illegible] பயமுறுத்தல் பதிகமாகவும், கடுங்கோபக் கட்டளைக் கலித்துறையாகவும், 'பிடிசாபம்' அகவலாகவும் மாற்றி அமைத்து மறுகோலம் செய்து காட்டும் ஆளவந்த அற்புத சித்தர்களின் அடுக்கடுக்கான வாயொலி முழக்கங்கள்!

அந்த முழக்கங்கள் வெறும் எழுத்து—சொல்—சொற்றொடர்—வாக்கியங்கள்—இவற்றின் வீர விளையாட்டல்ல, தரைப்படை—கடல்படை—விமானப்படை—போலீஸ் படை இவை யாவும் தங்கள் கட்டளைப்படி நடக்கத் தயாராக இருக்கின்றன என்பதை எண்ணத்தில் நிலைநாட்டிக் கொண்டதன் விளைவாக வெளிவரும் சொற்களின் கோரத் தாண்டவம் என்பதை எடுத்துக் காட்டும் விதத்திலே நடைபெறும் பட்டாளங்களின் பவனிகள்! வானூர்திகளின் திருஉலாக்கள்! கடலிடைச் செல்லும் கலங்களின் ஊர்வலங்கள்! போலீஸ் படைவரிசைகளின் அணிவகுப்புகள்!

"அந்த அணிவகுப்புகளும், ஊர்வலங்களும், திருஉலாக்களும், பவனிகளும் ஏன் நடைபெறுகின்றன தெரியுமா, இவ்வளவு பலம் பொருந்திய சர்க்காரை எதிர்க்கும் சழக்கர்களுக்கு, அவர்கள் கதி என்னாகும் இத்தகைய சர்க்காரை எதிர்த்து நின்றால் என்பதை எழிலுற விளக்கத்தான்!" என்ற உண்மையை வெளிப்படையாகவே பேசி, அதிலே ஓர் ஆனந்தமும் அடையும், சர்தார் படேல்களின் சலசலப்புகள்!

அந்த சலசலப்புகளின் கடுமையை கொஞ்சம் சாந்தமாக்கும் தோரணையில் — ஆனால் அந்த சர்தார்களின் மூல நோக்கத்துக்கு முள் முனையளவும் கேடு நேராத நல்வழியில் நடந்து கொள்ளும் பண்டித ஜவகர்லால்களின் குதூகல நடமாட்டங்கள்!

அந்தப் படேல் — பண்டிதர் பவனிக்குப் "பராக்! பராக்!" கூறும் 'புனித'மிகு பணி புரிவதில் புளகாங்கிதம் அடையும் புத்தறிவாளர்களான காமராஜர்களின் கருத்து மந்தம்!

அந்தக் கருத்து மந்தத்திலேதான் இருக்கிறது இந்தியாவின் இன்பவாழ்வு என்றெண்ணிக்கிடக்கும் பாரத புத்திரர்களின் பரவச நினைப்புகள் — பரமானந்தப் பேச்சுகள்!

இவ்வளவு கோலாகலங்களுக்கிடையேதான் குதூகல நடை நடந்து வந்திருக்கிறது, ஜனவரி 26.

அடே அப்பா! ஆளவந்த அருங்குணக் குன்றுகள் எவ்வளவு மகிழ்ச்சியடைந்ததாகக் காட்டிக் கொண்டன அந்த நாளில்! எவ்வளவு ஆரவாரம்! எவ்வளவு ஆர்ப்பாட்டம்! எத்தனைப் பெருஞ்செலவு! எத்தனை பவனிகள்! எத்தனை எத்தனை முழக்கங்கள்! பத்திரிகைகளைப் பிரித்தால் எவ்வளவு களிப்புச் சிந்துகள்!

ஜனவரி 26—அந்த நாள் வருகிறது வருகிறது, கொண்டாடுங்கள் — குதூகலமடையுங்கள்—குதித்துக் கூத்தாடுங்கள்—திருவிழா அது நமக்கு என்று எத்தனை நாட்களாக நித்தநித்தம் கூறிவந்தனர் சர்க்கார்! அந்தத் திருநாளை இப்படிக் கொண்டாடப் போகிறோம் அப்படிக் கொண்டாடப் போகி



றோம் — இவ்வளவு சிறப்புடன் விழா இருக்கும் — அவ்வளவு அருமையுடன் திருநாள் திகழும் என்றெல்லாம் எவ்வளவு அறிக்கைகளை அள்ளி அள்ளி வீசினர்! அந்த நாள் விழாவுக்காக எத்தனை எத்தனை காலமாக, எப்படி எப்படியெல்லாம், எந்தெந்த விதமாக ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்தனர்!

இந்த விழாவின் வருகையை முன்னிட்டு ஆட்சியாளர்கள் செலவிட்ட பணம் கொஞ்சமா! பணம் இருக்கட்டும் ஓர் புறம், இந்த விழாவுக்காக அவர்கள் செலவிட்ட நேரம், நினைப்பு, முயற்சி, திறமை இவை மட்டும்தான் என்ன சிறிய அளவா? உணவுப் பிரச்சினை உள்ளத்தை மருட்டிக் கொண்டிருக்கும் இந்த வேதனைமிகு சமயத்தில் இந்த வீண் களியாட்டத்திற்காக, ஆட்சிப்பீட தேவதைகள் ஆனந்தத்துடன் செய்திட்ட அலங்காரங்கள்தான் என்ன ஓர் அளவுக்கு, எல்லைக்கு உட்பட்டனவா?

ஏறத்தாழ ஒரு மாத காலம், இந்தப் பரந்த துணைக் கண்டத்து ஆட்சியாளர்கள், தங்களைப் பொறுத்தவரை இதே சிந்தனையாக இருந்தது மட்டுமன்றி, நாட்டு மக்கள் அனைவருடைய சிந்தனையையும் இந்தப் பக்கமே திருப்பிவிடும் திருப் பணியிலும், ஈடுபட்டிருந்தனர். இந்த 'விழா'வை இவ்வளவு பிரமாதப் படுத்தும் பிரசாரத்தில், இவர்கள் ஈடுபட்டிருந்ததன் காரணமாக நாட்டிலே இந்த ஒரு மாதகாலமாகக் கவனிக்கப் பட்டிருக்க வேண்டிய வேறு எவ்வளவோ பிரச்சினைகள்—பலமுக்கியமான பிரச்சினைகள்—நாட்டு மக்களின் நல் வாழ்வுக்கு அடிப்படையான பல பிரச்சினைகள்—சரியானபடி கவனிக்கப் படமுடியாமலே போய்விட்டன.

இவ்வளவு பெருஞ்செலவிலும், இவ்வளவு பேராரவாரத்துடனும், இவ்வளவு பலமான ஏற்பாடுகளுடனும், இவ்வளவு பெரு முயற்சிகளுக்கிடையேயும் கொண்டாடப் பட்ட இந்த விழா இந்த ஆட்சியாளர்களையும், அவர்களின் சித்தம் தங்கள் பாக்கியம் என்று கருதும் சில தொண்டரடிப்பொடி ஆழ்வார்களையும் தவிர, வேறு யாருக்காவது, துளியளவாவது மகிழ்ச்சியைத் தந்திருக்கிறதா? இன்ப உணர்ச்சியை ஊட்டியிருக்கிறதா? மக்களிடையே மலர்ச்சி ஏற்பட்டிருக்கிறதா? அவர்கள் முகத்திலே களிப்பு ஒளி தவழ்ந்ததா? அவர்கள் மனதிலே மோகன கீதம் உண்டா? யார்தானாகட்டும் என்ன பதில் கூற முடியும் இந்தக் கேள்விகளுக்கு, இல்லை—இல்லை—இல்லை என்ற ஒரு பதிலைத் தவிர?

மக்கள் மன்றத்திலே மகிழ்ச்சி எப்படி எக்களிக்க முடியும் இந்த விழாவைக் கண்டு?

ஜனவரி 26-ஆம் நாள் முதல் அமுலுக்கு வரும் புதிய அரசியல் திட்டம் மக்களால் மக்களுக்காகத் தீட்டப்பட்ட மக்கள் திட்டமாக இருந்தால் அல்லவா மக்கள் மனதிலே மகிழ்ச்சி பிறக்க முடியும் இந்தத் திருநாளின் வருகை கண்டு? இந்தத் திட்டம்தான் காங்கிரசுக்காக, காங்கிரசால் தீட்டப்பட்ட, காங்கிரஸ் திட்டமாக இருக்கிறதே, மகிழ்ச்சி எப்படிப் பிறக்கும் மக்களுக்கு இந்நிலையில்?

இந்தப் புதிய அரசியல் திட்டத்தைத் தீட்டியவர்கள் ஒரே ஒரு கட்சியினர் — காங்கிரஸ்காரர்கள்! அவர்களும் நாட்டிலே உள்ள சகல மக்களுடைய சம்மதத்தையும் ஒத்துழைப்பையும் பெற்று ஆட்சிப் பீடம் ஏறியவர்களல்ல—படித்தவர்கள், பணக்காரர்கள் ஆகிய இரு சாராரின் 'வோட்டு'களை மட்டுமே மூலபலமாகக் கொண்டு சர்க்கார் மாளிகை வாசிகளாக மாறியவர்கள! இந்திய மக்கள் தொகையில் நூற்றுக்குப் பன்னிரண்டுபேர்தான் இந்தப் படித்தவர்களும் பணக்காரர்களும்! இவர்களும்கூட, காங்கிரஸ்காரர்களை ஆட்சிப் பீடத்திற்கு அனுப்பியது புதிய அரசியலை வகுக்க அல்ல—வெள்ளையனை வெளியே ஓட்ட! வெள்ளை ஆட்சி இங்கிருந்த போது, அவர்களை வெளியேறச் செய்வதற்காகவே இந்த வீராதி வீரர்களை ஆட்சிமன்றத்திற்கு அனுப்பிவைத்தனர் படித்தவர்களும் பணக்காரர்களும்! இவர்கள அங்குச் சென்று அமர்ந்ததும் உலகச் சூழ்நிலையில் ஏற்படும் புதிய மாற்றத்தின் காரணமாக, இந்தியாவுக்கு விடுதலை கிடைக்கும்— வெள்ளையன் வெளியேறுவான் — இந்த தேசிய வாதிகள்தம் திருக்கரத்திலே நாட்டாட்சி சிக்கும்- பிறகு இவர்கள்தான் புதிய அரசியலை வகுக்கும் அறிஞர் பெருமக்களாக உருமாறுவர் என்ற இவ்வளவு உண்மைகளும் தெரிந்திருந்தால், அந்தப் பன்னிரண்டு சதவிகிதத்தினரும்கூட இவர்களை அனுப்பிவைத்திருக்க மாட்டார்கள் ஆட்சிப் பீடத்திற்கு! இவர்களுக்கு ஜெயில் வாசம் அனுபவித்துப் பழக்கம் உண்டே தவிர, உலக அரசியல் உண்மைகளை உணரும் அளவுக்கு அரசியல் ஞானம் கிடையாது என்பது, அவர்களுக்குத் தெரியாதா என்ன!

அரசியல் அறநெறிப்படி, வெள்ளையனை வெளியேற்றுவதற்காக என்று கேட்டுப்பெற்ற 'ஓட்டு' பலத்தைக் கொண்ட காங்கிரஸ் 'கனம்'களுக்கு! நாட்டுக்கான புதிய அரசியல் திட்டத்தைத் தீட்டும் உரிமை கிடையாது இந்தப் பாரதபுத்திரர்களுக்கு அரசியல் தெளிவும், நேர்மை உணர்வும், ஜனநாயகப்

பண்பும் இருந்திருக்குமானால், இவர்கள் இப்போதுள்ள சட்டசபைகளைக் கலைத்துவிட்டு, நாட்டுமக்கள் அனைவருக்கும் வோட்டுரிமை கொடுத்து, அந்த விரிந்த வோட்டுரிமை என்ற அடிப்படைமீது புதுத் தேர்தல் நடத்தி, அந்தத் தேர்தலில் வெற்றி பெறுகிற உறுப்பினர்களைக் கொண்டு புதிய அரசியல் திட்டம் தீட்டப்படுவதற்கான வசதியினைச் செய்துதந்திருக்க வேண்டும். அதுதான் முறை. அதுதான் அரசியல் நெறி. அதுதான் ஜனநாயக வழி.

ஆனால் அந்த அறநெறியைக் கடைப்பிடித்தனரில்லை இந்தக் காங்கிரஸ் கனவான்கள். எப்போதோ ஒரு காலத்தில், வேறு ஏதோ ஒரு பணியாற்றுவதற்காக, நாட்டுமக்களில் நூற்றுக்குப் பன்னிரண்டுபேர் மட்டும், தங்களை அனுப்பிவைத்த அந்தப் பழைய உரிமையை வைத்துக்கொண்டு, அந்த 100-க்குப் 12 பேருக்கு மட்டுமல்ல — நாட்டுமக்கள் அனைவருக்கும், அவர்களுடைய ஒப்புதலைக் கேட்டுப்பெற்றல்ல — அதுபற்றிய கவலையே அணுவளவுமின்றி, தாங்களாக, தங்கள் சொந்த விருப்பு வெறுப்புக்கு ஒத்த விதமாக, ஜனநாயகப் பண்பாட்டிற்கு முற்றிலும் மாறான முறையில், தங்கள் மனம்போன போக்கில் இந்தத் துணைக்கண்டத்தின் அரசியல் அமைப்புத் திட்டத்தைத் தீட்டியிருக்கின்றனர் இந்தத் தேசபக்த திலகங்கள்!

அப்படித்தான் நெறியற்ற முறையில், பிற கட்சிகள் அத்தனையையும் உதாசீனம் செய்து, மக்கள் கருத்து எத்தன்மையது என்பதைப்பற்றிய சிந்தனையும் அற்று, எதேச்சாதிகாரமான தன்மையில் தாமாகவே தீட்டியிருக்கின்றனரே திட்டம், ஒரு கட்சித் திட்டம்—ஒரு சிறுகூட்டம் தீட்டிய திட்டம் — பிறர் ஒப்புதலைப் பெறாத திட்டம்— அந்தத் திட்டத்தையாவது ஜனநாயக மணம் கமழும் விதத்திலே தீட்டியிருக்கின்றனரா— அதுவும் இல்லை!

தங்கட்கு உரிமை இல்லாத ஒரு செயலை, போலீஸ் பலமும் பட்டாளத் துணையும் தமக்கிருந்த ஒரே காரணத்தால், துணிகரமாகச் செய்ய முன்வந்த இந்தச் சுந்தர புருஷர்கள், இந்தச் செயலை ஒழுங்காகவாவது செய்திருந்தால், "ஏதோ போகட்டும் பாபம்! தங்கட்கு உரிமையற்ற செயலைத்தான் செய்தனர் என்றாலும் ஒழுங்காகச் செய்துமுடித்திருக்கின்றனர் — மன்னித்து விடுவோம் இவர்களின் முதல் பெருந் தவறை" என்றாவது கருதி மக்களே அமைதி பெற்றிருப்பர். ஆனால் அத்தகைய மன அமைதியைத் தரும் விதத்திலேயும் அமைந்ததல்ல இந்த மாவீரர்கள் தீட்டியுள்ள திட்டம்!

இந்தியத் துணைக்கண்டத்தை வேக வேகமாகப் பாசீசப் படுகுழிக்கு இழுத்துச் செல்லக்கூடிய கொடுமையும் பிழைபடு நெறியும் மலிந்ததோர் சர்வாதிகாரச் சித்திரம் இந்தப் புதிய திட்டம்.

**இந்தத்திட்டத்திலே,** மக்களாட்சியின் முழுநலம் தவழவில்லை— எதேச்சாதிகாரத்தின் கோரநடனமே நிறைந்திருக்கிறது.

மாகாணங்களுக்கு சுய ஆட்சி உரிமை எனும் உன்னத உணவு தரப்படவில்லை— அழுத்தம் திருத்தமான மத்திய சர்க்காரின் காலின்கீழ் கிடந்துசிதைந்து சீரழியும் சிறுமைநிலைதான் தரப்பட்டிருக்கிறது.

நீதி மன்றங்களுக்கு எந்தநிலையிலும் நியாயத்தையே நிலைநாட்டும் நல்லதோர் அதிகாரம் தரப்படவில்லை — ஆட்சியாளர்கள் இட்ட ஏவல் படி நடந்து தீர வேண்டிய 'சிற்றாள்' நிலைதான் தரப்பட்டிருக்கிறது.

எழுத்துரிமை, பேச்சுரிமை, கூட்டம் கூடும் உரிமை முதலிய அடிப்படை உரிமைகள் மக்களுக்கு அளிக்கப் படவில்லை— ஆனால் மக்களைக் காரணமின்றிச் சிறையில் அடைப்பதற்கான முழு உரிமை மட்டும்மிகத் தாராளமாகத் தரப்பட்டிருக்கிறது போலீசுக்கு!

எதிர்கால ஆட்சியாளர்கள் செய்யக்கூடிய வெவ்வேறு கொடுமைகளைக் களைவதற்கான வெவ்வேறுவழி வகைகள் வகுக்கப்பட வில்லை—ஆனால் அக்கொடுமைகளின் விளைவுகளைத் தாங்கமுடியாமல், மக்கள் கொதித்தெழுந்தால், அவர்களைக் காலக் கணக்கின்றிக் காராக்கிருகத்தில் சிக்க வைக்க மட்டும் எண்ணற்ற வழிகள் எழில் படத் தரப்பட்டிருக்கிறது.





சமதர்மவாடை இந்த நம்நாட்டில் பாய்ந்து பரவிப் புதுநலம் செய்திடுவதற்கான முறைகளும் வழிகளும் சட்டப் பிரிவுகளும் சேர்க்கப்படவில்லை — மாறாக அத்தகு நினைப்பை நாட்டிலே எழவொட்டாமல் தடுப்பதற்கான முதலாளித்வ வெடிகுண்டுகள் ஆங்காங்கே பொருத்தி வைக்கப்பட்டிருக்கின்றன.

இந்தியாவில் உள்ள பல்வேறு தேசிய இனங்களும், தத்தமது மொழி—கலை—நாகரிகம்—பண்பாடு இவற்றைப் போற்றி வளர்த்துச் சிறப்புறத் திகழ்வதற்கான ஆக்க முறைகள் வகுக்கப்படவில்லை—ஆனால் இந்த மொழிகள் அத்தனையையும் அள்ளிவிழுங்கி, தன் ஆதிக்கக்கொடியை நிலைநாட்டிக் கொள்வதற்கான எண்ணற்ற வாய்ப்புகளும் ஏராளமான வசதிகளும் வடநாட்டு இந்தி ஏகாதிபத்யத்திற்குத் தாராளமான முறையில் அளிக்கப் பட்டிருக்கின்றன.

வடநாட்டு ஏகாதிபத்திய இரும்புச் சங்கிலிப் பிணைப்பிலிருந்து விடுபட்டுத் தனி வாழ்வு— இன்பப் புதுவாழ்வு—சுதந்திரப் பெருவாழ்வு வாழ விழையும் திராவிடத் திருநாடு போன்றபகுதிகளுக்கு, வேண்டும்போது இந்திய யூனியனை விட்டுப் பிரிந்து கொள்ளலாம் என்ற ஜனநாயக உரிமை வழங்கப் படவில்லை— ஆனால் அந்தப் பகுதிகளை, அவற்றின் விருப்பத்திற்கும் விடுதலை வேட்கைக்கும் மாறாக, வடநாட்டுச் சுரண்டல் இயந்திரத்திலேயே கட்டாயமாகச் சேர்த்து வைத்துச் சீரழிய வைக்கும் அரசியல் மதியீனமே காட்சியளிக்கிறது,

**ஆம்!** ஜனவரி 26 முதல் அமுலுக்கு வந்துள்ள அரசியல் திட்டம் பிற்போக்குச் சக்திகளின் வெடிகுண்டு! முதலாளித்துவ முகாம்களில் தயாரிக்கப் பட்ட விஷப்புகை! பாட்டாளிக் கூட்டத்தின் உரிமைகளைத் தகர்த்தெறியும் டார்ப்பிடோ! வர்க்கத்திற்கோர் வட்டாரம் என்ற சிறந்த இலட்சியத்தின் மீது எய்யப்பட்ட ஈட்டி! எவ்வளவு விரைவில் இயலுமோ அவ்வளவு விரைவில் வெட்டிக் குழி தோண்டிப் புதைக்கப் படவேண்டிய அறக்கொடிய நச்சுப்பாம்பு! மக்கள் ஆட்சி என்ற மகத்தான தத்துவத்தின் பரமவைரி!

எனவேதான், நாட்டிலே உள்ள எல்லா முற்போக்குச் சக்திகளும் இந்த அரசியல் திட்டத்தை முழு மூச்சுடன் எதிர்த்து நிற்பதோடு, இந்தத் திட்டம் அமுலுக்கு வரும் முதல் நாளாகிய ஜனவரி 26ஐத் திருநாளாகக் கொண்டு மகிழ்வது கூடாத காரியம்—தவறான செயல் என்றும் திட்டவட்டமாகத் தெரிவித்துவிட்டன.

**திராவிட முன்னேற்றக் கழகம்**
**திராவிடக் கழகம்**
**பொதுவுடமைக் கட்சி**
**சமதர்மக் கட்சி**
**சரத் சந்திரபோஸ் சமதர்மக் கட்சி**
**சீக்கியர் கட்சி**

இவை அத்தனையும் ஜனவரி 26 என்ற உரிமையைப் பறிக்கும் திருவிழாவிலே கலந்துகொள்ள மறுத்துவிட்டன. ஆளவந்தார்களையும், அவர்களுடைய சொற்படி கேட்டுத் தீரவேண்டிய நிலையிலே இருக்கும் காங்கிரஸ் கூடாரத்தினரையும் தவிர, நாட்டிலே உள்ள எல்லாக் கட்சிகளும் இந்த விழாவைத் துச்சமென வெறுத்து ஒதுக்கிவிட்டன.

குறிப்பாக, திராவிட மக்களின் இருதய கீதமாகத் திகழும் 'திராவிட முன்னேற்றக் கழகம்', இந்த அரசியல் திட்டத்தைத் திராவிடப் பெருங்குடிமக்கள் ஒருபோதும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்பதைத் தெளிவாகவும், திட்டமாகவும், கழகப் பொதுச் செயலாளர் அண்ணா அவர்களின் அறிக்கை மூலமாகவும், சென்ற கிழமை சென்னைமா நகரில் சிறப்புற நடைபெற்ற மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் வாயிலாகவும் அழுத்தந் திருத்தமாக அறிவித்துவிட்டிருக்கிறது.

இவ்வண்ணம், இந்தத் துணைக்கண்டத்திலே உள்ள எல்லா முற்போக்குச் சக்திகளாலும் வெறுக்கப்படும் ஓர் அரசியல் திட்டம் — மக்கள் மன்றத்திலே சிறிதளவும் ஆதரவைப் பெற முடியாது ஒதுக்கப்பட்டுக்கிடக்கும் ஓர் அரசியல் திட்டம் — ஒரு சில வடநாட்டுக் குஜராத்தி மார்வாடி முதலாளிகளின் நன்மையைமட்டுமே நிலைநாட்டும் தன்மையும் திறமையும் வாய்ந்ததாய்க் காட்சி அளிக்கும் ஓர் அரசியல் திட்டம்—இந்தியாவில் உள்ள பல்வேறு இனங்களுக்கு சுய ஆட்சி உரிமையை வழங்காத சூது மிகுந்ததோர் சுரண்டல் திட்டம் நெடுநாள் நீடித்து நிற்க முடியாது. நிச்சயமாக முடியாது இன்றைக்கில்லாவிட்டால் நாளை, நாளை இல்லாவிட்டால் பிறிதோர் நாள், இந்தத் திட்டம், இந்தத் துணைக்கண்டத்து மக்களின் உண்மைப் பிரதிநிதிகளால் தூள்தூளாகக் கிழித்தெறியப்பட்டுப் புதியதோர் திட்டம் உருவாக்கப்படப்போவது உறுதி!

அந்த உறுதியிலே யாருக்காவது ஐயமிருந்தால், அப்படி ஐயப்படுபவர்கள், அதோ, ஓடிய இடம் தெரியாமல் தப்பி ஓ-

(5-ம் பக்கம் பார்க்க)




தொடர்கதை:

இருபத்தோராம் பகுதி

நீலவான் நிலவு

அரண்மனையின் மேல் மாடியில் அரசிளங்குமரி வஞ்சி, சோகமே உருக்கொண்டவளைப்போல நின்றிருந்தாள். அருகே அவள் தோழி தேன்சுவை, அவளுக்கு ஆறுதல் வார்த்தைகள் கூறிக்கொண்டிருந்தாள். நீலவானில் நிலவு பவனி வந்து கொண்டிருந்தது.

"தேன்சுவை, நாளுக்கு நாள் என் நம்பிக்கை குறைந்து கொண்டே வருகிறதே! ஆண்டுகள் இரண்டு ஆகியும் அவரைப் பற்றிய தகவல் ஒன்றும் கிடைக்கவில்லையே! என் செய்வேன்? நீர் வற்றிய தடாகத்தைப் போல, மகிழ்ச்சியற்ற உள்ளத்தோடு எத்தனை நாட்கள் வாடுவேன்? சிறகொடிந்த கிளியானேன்! காலொடிந்த மயிலானேன்! கா அறுந்த குயிலானேன்! நான் வாழ வேண்டுமா இனியும்?......"

"அம்மா, வீணாக ஏன் மனதைக் குழப்பிக் கொள்கிறீர்கள்? நான் தான் சொல்கிறேனே ........"

"நாடே சொல்கிறதே, அவர் இறந்துவிட்டார் என்று! நீ சொல்வதை நான் எப்படியடி நம்புவது?"

"கம்புகள் என்ன, நாட்டின் விடுதலைக்காக நம்மை எல்லாம் பிரிந்திருக்கிறார் அவர்!"

"விடுதலையா நாட்டிற்கு? விடுகதையா போடுகிறாய்?"

"புதிர் போலத்தான் தெரியும், பூசுரர்களின் லீலைகளைப் புரிந்து கொள்ளாத வரைக்கும்!"

"பூசுரர்களின் லீலைகளா? இன்றென்னடி புதுமையாகப் பேச ஆரம்பித்துவிட்டாய்?"

"கேற்றிரவு தான் அம்மா, சிப்பி திறந்து முத்து பிறந்தது!"

"அல்லடி அல்ல! கட்டி உடைந்து சீழ் வடிந்திருக்கிறது!"

"உண்மை, உண்மை! இளவரசியாரே, நீங்கள் சொல்வதுமுற்றிலும் உண்மை! ஆரியம் என்னும் விஷ ஈக்கள் கடித்ததினால், சேரநாட்டின் திருமேனியில் உண்டான கட்டியை, பகுத்தறிவு என்னும் ரண சிகிட்சை செய்ததினால், அறியாமை மூடக்கொள்கை என்னும் சீழ் வடியத் தொடங்கி இருக்கிறது! அரசிளங்குமரியே, அவ்வளவும் நிசம் நீங்கள் சொல்லியது!"

"சிறுகச் சிறுக என்னைச் சாகடிப்பதைவிட, ஒரேயடியாகக் கொன்றுவிடேன்! ஏன் இந்த வீண் தொல்லை?"

"வீண் தொல்லை என்று கூறுகிறீர்களா? வீறுகொண்டு எழுகின்றாளா? என்பதை, அறிந்து தெரிவிக்கும்படிதான் சொல்லி அனுப்பி இருக்கிறார்! ஆமாம், சொல்லி அனுப்பி இருக்கிறார்!"

"சொல்லி அனுப்பி இருக்கிறாரா? அவரா? என் உயிரா? உண்மையில் உயிரோடு இருக்கிறாரா? உள்ளத்தில் அடைத்துப் பாலும், நாவில் பொருட்பாலும், கண்ணில் காமத்துப் பாலும் கொண்ட என் வள்ளுவர் உயிரோடு இருக்கிறாரா? என்னவென்று சொல்லி அனுப்பினாரடி?"

"நீர் வற்றிய தடாகத்தில் வெள்ளம் வந்து விழப் போகிறது! சிறகொடிந்த கிளி, சிறகு பெற்று வானில் சிந்துபாடி பறக்கப் போகிறது! காலொடிந்த மயிலுக்குக் கால் முளைத்து ஆனந்த நடனம் ஆடப் போகிறது! நா அறுந்த குயில் நாபெற்று இன்னிசை பாடப் போகிறது! — இப்படிச் சொல்லி அனுப்பினார் அம்மா!"

"விளையாடுகிறாயா?"

"நானேன் அம்மா விளையாடப் போகிறேன்! தாங்கள் தான் இனி அவரோடு வேடம் பூண்டு, விளையாடப் போகிறீர்கள்!"

"தேன் சுவை, உனக்குப் புண்ணியமாகப் போகிறது, செய்தியைச் சொல்லடி!"

"புண்ணியமாவது, பாவமாவது எல்லாம் ஆரியரின் போதைமொழி!"

"வேதாந்தி அம்மா, விஷயத்தை விரைவாகச் சொல்லம்மா!"

"இளவரசி அம்மா, இதற்குள் அவசரம் என்ன அம்மா!"

இளவரசி வஞ்சியும், தேன்சுவையும் சிரித்தனர்! சோட்டின் கொடிய விலங்குகளினால், நாட்டின் கண்மணி, வீரன் தூயமணி மரணமடைந்து விட்டதாகவே அரசனுள்பட அனைவரும் நம்பினர்கள்! இளவரசி மட்டும், நம்பவில்லை, வாணம் தேன்சுவை கூறிக்கொண்டே இருந்தாள், உயிரோடு அவன் இருப்பதாக! அன்றுதான் தோழி வஞ்சியிடம் உண்மையை ஒருவாறு வெளியிட ஆரம்பித்தாள்.

"சொல், தேன்சுவை!"

"சொல்லக் கூடாது, இளவரசி!"

"போதுமடி உன் குறும்பு! வம்பு பேசுவாய், வளர்த்துவாய், வதைத்து என்னைச் சாகடிப்பாய்— இது உனக்கு வழக்கம் தானே!"

"ஐயோ! சாகாதே அம்மா, சாகாதே! நீ வாழ்ந்திருந்து செய்ய வேண்டியது, ஊரூராகச் சென்று ஆடிக் காட்ட வேண்டியது, ஏராளமாக இருக்கின்றன...... அம்மா,"

"ஐயோ! சாகாதே அம்மா, சாகாதே! நீ வாழ்ந்திருந்து செய்ய வேண்டியது, ஊரூராகச் சென்று ஆடிக்காட்ட வேண்டியது, ஏராளமாக இருக்கின்றன......... அம்மா, கோபம் வேண்டாம்! உண்மையைத் திடீரென்று தங்களிடம் நான் சொல்லிவிடக்கூடாது. பூரணமாகச் சொல்லவும் முடியாது! இன்னும் சிறிது நேரத்தில் என் அத்தை இங்கு வருவாள்! தனியாகத் தங்களைக் கண்டு பேசுவாள். ஆரியத்தின் மோகம், தங்கள் காதலர்

(5-ம் பக்கம் பார்க்க)





# விசித்திர வியாபாரி

போட்ட முதல் போய்விடுமோ—போய்விட்டால் கடனைக முதல் கொடுத்தவன் வீடு வாசலை ஏலத்தில் எடுத்துக் கொள்வானே—என்ன செய்வது—எப்படித்தான் காலங் கழிப்பது—தொழில் எதுவும் இல்லாமல் உட்கார்ந்திருந்தால் குன்றும் கரைந்து விடுமே— மார்க்கம் ஒன்றும் தோன்றவில்லையே—என்று எண்ணாத நடுத்தர வகுப்பினர் இந்த நாளில் ஒருவரும் இருக்க முடியாது.

வியாபாரம் மந்தமாக இருக்கிறதே— பணமுட்டு தினம் தினம் வளர்ந்து கொண்டு வருகிறதே—கொள்முதல் செய்த ஜவுளி தினுசுகளையெல்லாம் அழகாக அடுக்கி வைத்துக் கொண்டு கடைக்கு வருவதும் போவதுமாக இருக்கிறோமே— இதில் போட்ட பணம் பெட்டியிலே இருந்திருந்தாலாவது மன நிம்மதியோடாவது காலங் கழித்துவரலாமே—என்று உள்ளம் உடைந்து பேசாத வியாபாரி கிடையாது.

சிறு சிறு கற்களை மணிலாப் பயிரிலே கலந்து வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்து எப்படியோ காசை உருவாக்கினோம்— புழுக்கவைத்த புளியைக் கப்பலிலே ஏற்றிவிட்டு ஒன்றுக்குப் பத்தாகவிலையைக் கூட்டிப்பணம் சேர்த்தோம்—இனி இந்த மாதிரி நாணயமில்லாத வியாபாரம் செய்து பொருள் ஈட்ட முடியாதுபோல இருக்கிறதே- என்று வேதனைப்படாத நாணயஸ்தர்கள் கிடையாது.

செய்த வியாபாரத்துக்கு ஒழுங்கான கணக்கு எழுதவில்லை—வருமான வரியைக் குறைத்துக் கொள்ளப் பொய்க் கணக்கு எழுதிப் பித்தலாட்டம் செய்தோம்—எவ்வளவோ ஒழுங்கீனங்களை எல்லாம் செய்து கோடிக்கணக்கிலே பணத்தைக் குவித்தோம்—இன்றுள்ள வியாபார நெருக்கடியில் முன்போல் கொள்ளையடிக்க முடியாது போல் இருக்கிறதே என்று மனமுடைந்து பேசாத ஒழுக்க சீலர்கள் கிடையாது.

பிணம் வீதியிலே விழுந்து கொண்டே இருந்தது —நாம் இரக்கம் துளியும் இல்லாமல் பணத்தைப்பெட்டியிலே சேர்த்துக் கொண்டே இருந்தோம்- ஊர்மக்களுக்கு என்று இருந்த உணவுப் பொருட்களைக் கள்ள மார்க்கெட்டிலே விற்று ஊர்மக்களைச் சாகவிட்டோம்—இனி அதுபோலப் பணந்திரட்ட முடியாதுபோல இருக்கிறதே— என்று எண்ணிப் பார்த்து வேதனைப் படாத உணவுப் பொருள் வியாபாரி இருக்க முடியாது.

தொட்டாலே கிழிந்துவிடும் குப்பைக் கூளங்களை எல்லாம் உயர்ந்த துணிகள் என்று கூறி விற்றுப்பணத்தைஅம்பாரமாகக் குவித்தோமே-நாட்டின் கீர்த்தி குறைந்தாலும் நமது கோபல பெட்டி நிறைந்தால் போதுமென்று நடந்துகொண்டோமே —பாட்டாளியைக் கசக்கிப் பிழிந்து கோடி கோடியாகக் குவித்தோமே — இனி அந்தக் காலம் திரும்பப் போவது கிடையாது என்று கதறிக் கொண்டிராத கனவான் கிடையாது.

ஐயாயிரம் ரூபாய் மதிப்புடைய வீட்டுக்கு ஐந்நூறு ரூபாய் கடனைக் கொடுத்து ஐந்து ஆண்டுகளில், அந்த வீட்டையே நமதாக்கிக் கொண்டோமே—காட்டுப்பாக்கம் மைனருக்குக் கேட்கும் போதெல்லாம் நூறு இருநூறுக் கொடுத்து அவருடைய ஐம்பது காணி அயன்நஞ்செய் நிலத்தையும் அபகரித்துக் கொண்டோமே—இனி அப்படி எல்லாம் பணம் சேர்க்கிற மாதிரியில் நாட்டின் பொருளாதார நிலை இல்லையே—என்ன செய்வது— என்று கண்ணீர்விடாத புண்ணியவான் கிடையாது.

இப்படி ஒவ்வொரு வியாபாரியும், அவரவர்கள் தொழிலில் ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலையைக் கண்டு சிந்தனையில் மூழ்கத்தான் செய்வர். நாட்டின் செல்வ நிலை வளருவதாகக் காணோம். நாளுக்குநாள் நாட்டைப் பொருளாதார இருள் கவிழ்ந்து கொண்டே வருகிறது. கையிருப்பில் நல்ல சாதனங்களை உடையவர்களின் நிலைப்பே இப்படி இருக்குமானால், சாதாரண மக்களின் நிலை எவ்வளவு சோகம் நிறைந்ததாக இருக்கும் என்பதைக் கற்பனை செய்து பார்க்க வேண்டும்.

ஏழை மக்களிடம் என்ன இருக்கிறது வியாபாரம் செய்ய? அவர்கள் உழைப்பை, கூவிக் கூவி வீதிகளிலே விற்றாலும், உழைப்பை விலை பேசுவதற்குக் கூட ஒருவரும் முன் வருவதில்லை. ஊராளுவோருக்கோ, இது பற்றின அக்கரை எதுவும் இல்லை. திருவிளையாடல் புரிந்ததாகச் சொல்லப்படும் திருவாலவாய் அப்பனே அற்புதம் புரிவதை நிறுத்திக் கொண்டு அநேக நூற்றாண்டுகள் ஆகிவிட்டன. தசாவதார தாசரதியோ கலியுக முடிவில் தான் திரும்ப அவதாரம் எடுப்பார் என்று சொல்லப்படுகிறது. முச்சந்திப் பிள்ளையார்களுக்கோ, போக்குவரத்து சாதனங்களிலிருந்து தங்களைத் தற்காப்புச் செய்து கொள்வதே தீராத தொல்லை

யாகப் போய்விட்டது. இந்நிலையில் என்னதான் செய்வான் ஏழை? எவரிடம்தான் செல்வான், இன்னலைப் போக்கிக் கொள்ள?

இதோ ஒரு புதிய முறை வியாபாரத்தைப் பாருங்கள். பாட்னா என்னும் நகரிலே ஒருத்தி, கணவனைப் பறிகொடுத்த கைம்பெண்ணாகக் காலங்கழித்து வந்தாள். கணவன் இறக்கும் பொழுது அவள் வயிற்றிலே எட்டுமாத சிசு உருவாகி இருந்தது. பத்துமாதம் ஆனதும் பெற்றெடுத்தாள் ஒரு சிசுவை. மூக்குச்சப்பையாகி, முகவாய்ச்கட்டை நீண்டு, கண்கள் உள்ளடங்கி, நெற்றி சுருங்கி, கருங்கடுவன் போல அந்தக்குழந்தை இருந்திருந்தாலும், பெற்றதாய்க்கு அது தங்கச் சிலையாகத்தானே காட்சியளித்துக்கொண்டு இருக்கும். மிட்டாமிராசு இருந்தால்தான் குழந்தைகள் மீது பாசமிருக்கும் ஏழைகளுக்கு இருக்காது என்ற இயற்கைஏற்பாடுதான் உண்டா? கோட்டை வாசிகளுக்குத் தான் தம் குழந்தைகளின் மழலை குழலோசையினும் இன்பம் தரும், குச்சு வீட்டிலே காலங்கழிப்பவர்களுக்கு வேம்பாக இருக்கும் என்ற இயற்கை நியதிதான்உண்டா? செல்வராக இருந்தாலும், ஏழையாக இருந்தாலும் பாசமும்பற்றும் பொது பண்புகள் தானே?

குழந்தையைப் பெற்றெடுத்தாள் அந்தப் பஞ்சை. வயிற்றுப் பளு குறைந்து விட்டதால் மகிழ்ந்தாள். ஆனால் வேறு வேதனை குடிபுகுந்து அவள் உள்ளத்தைக் குடையத் தொடங்கியது. தன் வயிற்றுக்குச் சோறு தேடவேண்டும். அதற்கு ஏதாவது பாடுபட்டாக வேண்டும். பாடுபடுவதென்றால், பச்சைக் குழந்தையை வைத்துக் கொண்டு இருப்பவளை யார் தான் வேலைக்கு அமர்த்திக் கொள்ள முன் வருவார்கள்? நாலு வீடுகளில் எடுபிடி வேலைகளைச் செய்து கொண்டு, ஏதோ வயிற்றைக் கழுவலாம் என்றால், அதற்கும் அந்தக் குழந்தை இடைஞ்சலாக இருப்பதை உணர்ந்தாள். குழந்தையோடு பட்டினி இருந்து மடிவது அல்லது குழந்தையை விட்டுப் பிரிவது என்ற இரண்டு வழிகளைத் தவிர அவளுக்கு வேறொரு வழியும் தோன்றவில்லை.

இறப்பைத் தழுவிக் கொள்ள அவள் தயாராக இல்லை. அதுவுமல்லாமல், தான் பத்துத் திங்கள் சுமந்து பெற்ற குழந்தை, தனது கண் முன்னர் மாணத்தோடு போராடுவதையும் பார்த்துக் கொண்டிருக்கத் துணிவேற்படவில்லை அவளுக்கு. இறப்பின் பிடியில் சிக்கி அவஸ்தைப் படும் சிசு, தனக்கு உண்டாக்கும்வேதனையிலும், சிசுவை உயிரோடுபிரிவதால் ஏற்படும்வேதனை தாங்கிக் கொள்ளக் கூடியதாகத்தான் இருக்கும் தனக்கு என்று தீர்மானித்துக் கொண்டாள். தீர்மானித்துக் கொண்டபடியே, குழந்தையை விலை கூறினாள். யாரோ ஒரு புண்ணியவான் சிசுவை, விலை கொடுத்து வாங்கிக் கொண்டான். அவள், தாய் என்னும் பெயரிழந்தாள். 'விசித்திர வியாபாரி' என்ற பெயருக்கும் பாத்தியதை உடையவளானாள்

இது நடைபெற்ற இடம் பாட்னா கல்லூரியின் முன்பு. சில மாணவர்கள் இந்தக் கொடுங்காட்சியைக் கண்டனர். குழந்தை, விற்பனைக்குரிய பண்டமாகக்கூட தமது பாரத பூமியில் இன்றும் இருந்து வருவதைக் கண்ட அந்த மாணவர்கள் உள்ளங்களிலே பலப்பல எண்ணங்கள் தோன்றாமல் இருக்க முடியுமா? பெற்ற தாயே, தனது குழந்தையை விற்று விடும் அளவிற்குத் துணிவைத் தரக்கூடிய சக்தி வறுமைக்கு உண்டு என்பதை அந்த மாணவர்கள் புரிந்து கொள்ளாமல் இருக்கமுடியுமா?

அந்தப் பஞ்சையை, குழந்தையை விற்பதற்கான விளக்கம் கேட்டனர். அவள் கூறினாள்— இல்லை — கதறினாள்

"கணவன் இறந்து இரண்டு மாதம் ஆகிறது. வறுமை வாட்டி வதைக்கிறது. எனது பார்வை வேறு பழுதுபட்டுப் போயிருக்கிறது. குழந்தையைப் பாதுகாக்க என்னால் முடியாது. எனவே, குழந்தையை விட்டுப் பிரிகிறேன். எங்காவது நன்றாக வளரட்டும்."

குழந்தையை விட்டுப் பிரியும் தாய் கூறுகிறாள் அழுது கொண்டே இவ்வாறு. ரூபாய் ஐந்து குழந்தையின் விலை.

இந்த சோகக்கதையைக் கேட்டும், கொடுமையைக் கண்ணாரக் கண்டும் இந்த மாணவர்களிலே இரண்டொருவருக்காவது, மூளை வேலை செய்ய ஆரம்பித்திருக்காதா? போதுமான அளவிற்கு ஏழையர்கள் விடுதி அந்த நாட்டில் இருந்திருந்தால் பெற்ற தாயே குழந்தையை விற்கும் கொடுமை நிகழ இடமிருக்குமா என்று யோசிக்காமல் இருந்திருப்பார்களா அந்த மாணவர்கள். அந்தக் கோரக் காட்சியைக் காணுவதற்கு முன்னர், எதிர் காலத்தில் தாங்கள் மேற்கொள்ளுவதற்காகத் தீர்மானித்திருந்த துறையையே கூட அக்காட்சி மாற்றி விட்டிருக்கும்! ஒரு தாய் தான் பெற்ற குழந்தையையே விற்கும் அக்கிரமம், இனி

(3-ம் பக்கம் பார்க்க)

Edited, Printed and Published by P. G. Manickavachagam alias Kanchi Manimoliyar Free Printers 147, Coral Merchant St., Madras. Joint Editor, M. Ilancheliyan B A. (Hons)

